உ

சிவமயம்

அருள்தரும் பெரியநாயகியார் உடனமர்

அருள்தரும் அரசிலிநாதர்

# திருஅரசிலி

## தலவரலாறும் திருஞானசம்பந்தர் தேவாரமும்









கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

திருக்குறள்

உ
நமசிவாய

# அருள்தரும் பெரியநாயகியார் உடனமர் அருள்தரும் அரசிலிநாதர்

## தலபுராணமும் சம்பந்தர் தேவாரமும்

### ஐங்கரப்பெருமான் துதி

வானுலகும் மண்ணுலகும் வாழ மறை வாழப்
பான்மை தரு செய்ய தமிழ் பார்மிசை விளங்க
ஞான மத வைந்துகர மூன்று விழி நால்வாய்
ஆனைமுகனைப் பரவி யஞ்சலி செய்கிற்பாம்

### நால்வர் துதி

சைவத்தின் மேற்சமயம் வேறில்லை அதில்சார் சிவமாம்
தெய்வத்தின் மேல் தெய்வம் இல்லெனும் நான்மறைச் செம்பொருள்
வாய்மை வைத்த சீர் திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச் செய்த நால்வர் பொற்றாள் எம் உயிர்த்துணையே

### முன்னுரை

மூவரும், தேவரும் காணா அரும்பொருளாகிய பரம்பொருள் கருணையே வடிவாகி இம்மண்ணுலக உயிர்கள் உய்வுபெரும் பொருட்டு இப்பூவுலகில் பல இடங்களிலும் எழுந்தருளி பல்வேறு காலங்களில் பல விதங்களிலும் காட்சி கொடுத்து கோவில் கொண்டார்.

இவ்வாறு அமைந்த திருத்தலங்களில் மூவர்களால் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் மிகவும் மகிமை பொருந்தியவை ஆகும்.

இத்தகைய அருஞ்சிறப்பு பெற்ற தலங்களில் ஒன்றே திருஅரசிலி.

இத்திருத்தலத்தின் சிறப்புகளைப் பற்றி இனி காண்போம்,,,

| | |
|---|---|
| தலப்பெயர் - | திருஅரசிலி |
| அம்மையப்பர் திருநாமம் - | அருள்தரும் பெரியநாயகி உடனமர் அருள்தரும் அரசிலிநாதர் |
| தலவிருட்சம் | - அரசமரம் |
| தீர்த்தம் | - வாமதேவ தீர்த்தம் |
| புராண வெளிப்பாடு | - ஒழுந்தியாப்பட்டு புராணத்தில் ஒரு அங்கம் |
| இட அமைவு | - திண்டிவனம் புதுவைச் சாலையில் ஒழுந்தியாப்பட்டு அருகாமையில் 2கி.மீ. தொலைவில் உள்ளது. |
| போக்குவரத்து | - பேருந்து வசதி எந்நேரமும் உண்டு |

அருகில் அமைந்துள்ள திருத்தலங்கள் -

1. திருஇரும்பைமாகாளம்
2. திருவக்கரை

*புராணச் சுருக்கம்*

திருஅரசிலி என்னும் இத்திருத்தலம் தமிழ்நாட்டின் தேவாரப்பாடல் பெற்ற திருத்தலங்களில்,சான்றோர் நிறைந்த தொண்டைநாட்டுத் திருத்தலங்கள் முப்பத்திரண்டினுள் ஒன்றாகும். இத்திருத்தலம் திருஞானசம்பந்த மூர்த்திகளால் பாடப்பெற்ற சிறப்பிற்குரியதாகும்.

இத்திருத்தலத்தே எழுந்தருளியுள்ள இறைவருக்கு சாளுவதேச மன்னன் திருப்பணி செய்துள்ளான். வாமதேவ முனிவர் இங்கு வழிபட்டுள்ளார்.

சாளுவ மன்னன் தனது நித்திய பூசைக்காக நந்தவனம்

அமைத்து இறைவனை வழிபட்டு வந்தான். அதுசமயம் பரமநாடகன், அவ்வரசனை சோதிக்கும் பொருட்டு மான் வடிவு கொண்டு அந்த நந்தவனத்தில் மேயலானார். இதனைக் கண்ட காவலர் அரசனிடம் மான் நந்தவனத்தில் மேய்வதாகக் கூற, மன்னன் தானே நேரில் வந்து அந்த மானைத் துரத்த முயற்சி செய்தான்.

மானுருக் கொண்ட பரம்பொருள் அவ்வரசனின் தூய அன்பிற்கும், திருத்தொண்டிற்கும் இடையூறு ஏற்படக் கூடாது என்று திருவுளம் கொண்டு, தலவிருட்சமான அரசமரத்தின் அடியில் கண்ட புற்றினுள் மறைந்து விட்டார். அது கண்ட அரசன் காவலரை ஏவி அப்புற்றினுள் தேடச் செய்தான்.

அவ்வமயம் புற்றினுள் அமைந்த பரம்பொருள் சிவலிங்க வடிவுடன் காட்சி கொடுத்தார். காவலரின் செய்கையால் காயமுற்ற திருமேனியில் குருதி வடிவதைக் கண்டு அரசன் மிகவும் மனம் வருந்தினான். உடன் சுயம்பு மூர்த்தியின் நெற்றியில் பட்டம் சூட்டி *அவ்விடத்திலேயே பிரதிஷ்டையும் செய்வித்தான். அக்காலம்* பிரதோஷ காலமாக இருந்தது. ஆகவே இத்திருத்தலம் "பிரதோஷ க்ஷேத்திரம்" என அழைக்கப்படுகிறது.

இத்தலத்தில் இரண்டு கால பூசையும் மற்றும் அனைத்து விழாக்களும் சுருக்கமாகவும் சிறப்பாகவும் நடைபெற்று வருகின்றன.

இங்கு மூலவர் மிகச்சிறிய வடிவில் ~~கஜப்பிருஷ்ட விமானம் கொண்ட~~ கருவறையுள் காணப்படுகிறார். அம்பாள் தென் முகமாக அமர்ந்து அருள் பாலிப்பது சிறப்பாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இத்தலத்தை வழிபட்டு கருணையே வடிவாகிய அரசிலிநாதரின் திருவருளைப் பெறலாம்.


இந்தப் புராணம் எழுத உதவியர்,
அர்ச்சகர்
***அ. கந்தசாமி சிவாச்சார்யார்***
அருள்மிகு அரசிலிநாதர் ஆலயம்
*அரசிலி*

திருஅரசிலிநாதர் திருக்கோயில்
ஒழுந்தியாப்பட்டு அஞ்சல்
வானூர் (வழி)
வானூர் தாலுக்கா
விழுப்புரம் மாவட்டம் - *605 109*

## முத்தமிழ் விரகர் திருஅரசிலி அணைந்து இறைவனைப் போற்றி வணங்கிப் பாடிய தேவாரப் பதிகம்

திருச்சிற்றம்பலம்

பண் பியந்தைக்காந்தாரம் ] [2ஆம் திருமுறை

பாடல் வண்டறை கொன்றை பால்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிள மாலை மத்தமுஞ் செஞ்சடைக் குலாவி
வாடல் வெண்டலை மாலை மருவிட வல்லியம் தோள்மேல்
ஆடல் மாசுணம் அசைத்த அடிகளுக் கிடம்அர சிலியே 1

ஏறு பேணிய தேறி யிளமதக் களிற்றினை யெற்றி
வேறு செய்ததன் உரிவை வெண்புலால் கலக்கமெய் போர்த்த
ஊறு தேனவன் உம்பர்க் கொருவன்நல் லொளிகொளொண் சுடராம்
ஆறு சேர்தரு சென்னி யடிகளுக் கிடம்அர சிலியே 2

கங்கை நீர்சடை மேலே கதம்மிகக் கதிரிள வனமென்
கொங்கை யாளொரு பாகம் மருவிய கொல்லைவெள் ளேற்றன்
சங்கை யாய்த்திரி யாமே தன்னடி யார்க்கருள் செய்து
அங்கை யாலன லேந்தும் அடிகளுக் கிடம்அர சிலியே 3

மிக்க காலனை வீட்டி மெய்கெடக் காமனை விழித்துப்
புக்க வூரிடு பிச்சை யுண்பது பொன்றிகழ் கொன்றை
தக்க நூல்திகழ் மார்பில் தவளவெண் ணீறணிந் தாமை
அக்கின் ஆரமும் பூண்ட அடிகளுக் கிடம்அர சிலியே (4)

மானஞ் சும்மட நோக்கி மலைமகள் பாகமும் மருவித்
தானஞ் சாவரண் மூன்றுந் தழலெழச் சரமது துரந்து
வானஞ் சும்பெரு விடத்தை யுண்டவன் மாமறை யோதி
ஆனஞ் சாடிய சென்னி யடிகளுக் கிடம்அர சிலியே (5)

பரிய மாசுணங் கயிறாப் பருப்பத மதற்குமத் தாகப்
பெரிய வேலையைக் கலங்கப் பேணிய வானவர் கடையக்
கரிய நஞ்சது தோன்றக் கலங்கிய அவர் தமைக் கண்டு
அரிய ஆரமு தாக்கும் அடிகளுக் கிடம்அர சிலியே (6)

--- --- --- --- --- --- --- --- --- --- --- --- --- --- --- --- --- --- (7)

வண்ண மால்வரை தன்னை மறித்திட லுற்றவல் அரக்கன்
கண்ணுந் தோளும்நல் வாயும் நெரிதரக் கால்விர லூன்றிப்
பண்ணின் பாடல்கைந் நரம்பாற் பாடிய பாடலைக் கேட்டு
அண்ண லாயருள் செய்த அடிகளுக் கிடம்அர சிலியே (8)

குறிய மாணுருவாகிக் குவலயம் அளந்தவன் தானும்
வெறிகொள் தாமரை மேலே விரும்பிய மெய்த்தவத் தோனும்
செறிவொ ணாவகை யெங்குந் தேடியுந் திருவடி காண
அறிவொ ணாவுரு வத்தெம் அடிகளுக் கிடம்அர சிலியே (9)

குருளை யெய்திய மடவார் நிற்பவே குஞ்சியைப் பறித்துத்
திரளை கையிலுண் பவருந் தேரருஞ் சொல்லிய தேறேல்
பொருளைப் பொய்யிலி மேய நாதனைப் பொன்னடி வணங்கும்
அருளை ஆர் தரநல்கும் அடிகளுக் கிடம்அர சிலியே (10)

அல்லி நீள்வயல் சூழ்ந்த அரசிலி யடிகளைக் காழி
நல்ல ஞானசம் பந்தன் நற்றமிழ் பத்திவை நாளும்
சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந்தம ரர்தொழு தேத்த
வல்ல வானுல கெய்தி வைகலும் மகிழ்ந்திருப் பாரே (11)

திருச்சிற்றம்பலம்

இப்பதிகத்தில் 7ஆம் செய்யுள் மறைந்து போயிற்று.



சந்திப்பது நந்தி தன்திருத் தாளிணை
சிந்திப்பது நந்தி செய்ய திருமேனி
வந்திப்பது நந்தி நாமம்என் வாய்மையால்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே
-தமிழ் மந்திரம்

சிவாசலபதி பிரிண்டர்ஸ் கோவை 37 தொலைபேசி 213983, 210405



உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகிற் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்ச்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

# பிரதோஷ மகிமை

இறவாமையை அடைய அமிர்தம் வேண்டி தேவர்களும், அசுரர்களும் ஒரு காலத்தில் பாற்கடலைக் கடைந்தனர். மந்திர மலையை மத்தாகவும் சந்திரனைக் கடைத்தறியாகவும் வாசுகி என்ற பாம்பை கயிறாகவும் கொண்டு கடைய திருமால் ஆமை வடிவில் தன் முதுகில் மத்தைத் தாங்கிக் கொண்டு இருந்தார். அப்பொழுது அமிர்தத்திற்கு பதிலாக வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து 'ஆலாலம்' என்ற கொடிய விஷம் தோன்றிற்று. அதன் வேகத்தால் வெண்ணிறமாக இருந்த திருமால் நீலநிறமானார். ஆலாலம் வெப்பத்துடன் பயங்கரமாக தேவர்களை இடமாகவும் வலமாகவும் மறித்துத் துரத்த அவர்கள் நடுநடுங்கி திசைகள் தோறும் சிதறி ஓடினார்கள். எல்லோரும் தங்களைக் காக்க மனம் ஒன்றிய நிலையில் சிவபெருமானைத் துதித்த நேரம் பிரதோஷகாலம் ஆகும்.

திரயோதசி திதி வரும்நாளில் பிரதோஷ வேளையில் (அதாவது மாலை 4.30 மணி முதல் 6.00 மணிவரை) நந்தி தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகை காண சிவபெருமான் திருநடனம் செய்தருளினார். அச்சமயம் சரசுவதிதேவி வீணை வாசிக்க, இந்திரன் புல்லாங்குழல் ஊத, பிரம்மா தாளம் போட, இலட்சுமிதேவி பாட, திருமால் மிருதங்கம் வாசித்தார்.தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், திக்குபாலர்கள் அனைவரும் வந்து இறைவனை வழிபட்டனர்.

நாமும் இறைவனை வழிபட்டு எல்லா நலன்களையும் பெறுவோம்.